மீண்டும் பாசறை சென்றான். அரசரே! அந்த ஸஞ்சயன், கொல்லப்பட்ட சகுனியையும் ஆயிரக்கணக்கான கௌரவ ஸைனிகர்களையும், அவ்வாறே ஸௌப்திகத்தில் துரோண புத்திரரால் கொல்லப்பட்ட குதிரைகளுடனும் மனிதர்களுடனும் யானைகளுடனும் கூடியதும் கொல்லப்பட்டதுமான பாண்டவ சேனையையும், நாற்புறத்திலும் கொல்லப்பட்டிருக்கிற எல்லாப் போர் வீரர்களையும் யுத்தத்தில் கண்டு, சோகத்தினால் பீடிக்கப்பட்டவனாகவும் பயத்தினால் சோர்வை அடைந்தவனாகவும் அஸ்தினாபட்டணத்தைக் குறித்துச் சென்றான். பிரஜைகளுக்கு நாதரே! மிகுதியான இந்த யானைகளும் குதிரைகளும் கொல்லப்படவே, பற்பல தேசங்களில் தோன்றினவர்களும் யுத்தத்தில் கொல்லப்பட்டவர்களுமான பாண்டவ சேனா வீரர்களும் கௌரவ சேனா வீரர்களும் அற்று அந்தக் குருக்ஷேத்திரம் முழுதுமே சூன்யமாயிற்று. ஸஞ்சயன், துரியோதனனுடைய யுத்த விருத்தாந்தம் நடந்தது முழுமையையும் நடந்தபடியும் முறைப்படியும் சொன்னான்.

மகாத்மாவான தனஞ்சயனுக்கும் கர்ணனுக்கும் நடந்த இவ்விதமான மகா யுத்தத்தை எவன் படிப்பானோ, எவன் நாள்தோறும் கேட்பானோ அவன் நன்கு அனுஷ்டிக்கப்பட்ட யாகத்துக்குரிய பலனை அடைவான். ஷாட்குண்யங்களால் நிறைந்தவரும் சாசுவதமாக இருப்பவரும் வாயுவினாலும் சந்திரனாலும் சூரியனாலும் வஹிக்கப்படுபவருமான விஷ்ணுவே யாகரூபமாக இருக்கிறார். ஆதலால், அசூயை இல்லாதவனாக இதனைப் படிப்பவனும் கேட்பவனுமான மனிதன் எல்லா உலகங்களையும் ஜயிப்பான்; சுகியும் ஆவான்" என்று கூறினான்.

**பதினேழாவது நாள் யுத்தம் முடிந்தது**

## கர்ண பர்வம் முற்றிற்று



ஸ்ரீ மஹாபாரதம் பிரஸ், கும்பகோணம். 18—11—'52.